ரூ. 3.50

திருவள்ளுவராண்டு 2037
ஆவணி - ஆகஸ்ட் 2006

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்




இலண்டனில் குருமகாசந்நிதானம்

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 3-50 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 40-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 400-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| | |
|---|---|
| திருவள்ளுவராண்டு 2037 (விய) | மாதம் : ஆவணி |
| மலர் : 20 | இதழ் : 8 |




## இலண்டன் பயணம்!

ஷேக்ஸ்பியரின் வற்றாத இலக்கிய ஜீவநதி ஓடும் தேம்ஸ் ஆற்றங்கரையில் லண்டன் மாநகரில் ஆங்கில நாகரிகத்திற்கும், கலாச்சாரத்திற்கும் இணையாக தமிழர் நாகரிகத்தையும், தமிழ்மொழி பண்பாட்டு தடத்தையும் உயர்த்திப் பிடிக்கின்ற உன்னத அமைப்புத்தான் "பிரித்தானியா திருக்கோயில்கள் ஒன்றியம்." கல் எல்லாம் பேசும் பொற்சிலைகளாய் மண் எல்லாம் விண்முட்டும் கோபுரங்களாய், வண்ணங்கள் எல்லாம் உயிர்ப்புடைய ஓவியங்களாய், முத்தமிழோடு முறையான கலைகள் வளர்க்கும் பல்கலைக் கழகங்களாய் விளங்கிய நமது சமயஞ் சார்ந்த திருக்கோயில் வாழ்க்கையை, சமயத்தை விட்டுப் பிரிக்கமுடியாத பிரிய இயலாத தமிழை சமுதாயத்தை தான் மாறாத சமயத்தை நாளும், நாளும் வளர்க்கும் பணியில் ஈடுபட்டு வருவது தான் பிரித்தானியா திருக்கோயில் ஒன்றியம் என்ற மேன்மை மிகு அமைப்பு. தமிழ் மந்திரமாகிய திருமுறைகளையும், தமிழர் வேதமாகிய சைவசித்தாந்த சாத்திரங்களையும் உலகம் தழுவிய அளவில் வளர்க்கும் பணியில்தான் உலக சைவ சமய மாநாட்டை பிரிட்டன் தேசத்தில் இலண்டன் மாநகரில் வெற்றிகரமாக நடத்திவருகின்றது. மாநாட்டில் நாம் கலந்துகொள்ள வேண்டி ஆண்டுதோறும் அன்பின் அழைப்பு வந்த வண்ணம் இருக்கும். பணிச்சுமையால் மாநாட்டில் கலந்துகொள்வதை ஒத்திப்போட்டு வந்த நாம் இந்த ஆண்டு 9-வது உலக சைவ சமய மாநாட்டில் கலந்துகொள்ள ஒப்புதல் அளித்தோம். பேரூர் அடிகள் பெருந்தகை இச்சிறப்பு மிக்க மாநட்டில் பங்கெடுத்துக்கொண்டார்கள்.

2006-ஆம் ஆண்டு ஜூலை 12-ஆம் தேதி இலண்டன் நோக்கி வானூர்தியில் பயணம். மாண்புமிகு நீதியரசர் ஏ.எல். இராஜன் அவர்களும் அன்புக்குரிய அறநிலையத்துறை அமைச்சர்

பெரியகருப்பன் அவர்களும் அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய ஆணையர் பிச்சாண்டி அவர்களும் அறநிலையத்துறைச் செயலர் கற்பூரசுந்தரபாண்டியன் அவர்களும் கூடுதல் ஆணையர் திருமிகு. கனகய்யா, தலைமையக இணை ஆணையர் திருமிகு. தனபால் தேர்வாணைக்குழு உறுப்பினர் திருமிகு. பெருமாள்சாமி, அன்புக்குரிய கயல் தினகரன், குன்றக்குடி ஊராட்சிமன்றத் தலைவர் திருமிகு. குமார் மற்றும் ஏராளமான அன்பர்களும் நம்மை அன்பு உள்ளத்தோடு மகிழ்ச்சி பொங்க வழி அனுப்பி வைத்தார்கள். காற்றைக் கிழித்துக்கொண்டு வானூர்தி உயர உயரப் பறந்தது. 50,000 அடி உயரத்திலிருந்து கீழே தரைப்பகுதியில் கடலும் பாலைநிலமும், பசுமைக் காடுகளும் பரந்த நகரங்களும் பார்க்கப் பார்க்கத் தெளிவாய்த் தெரிந்தன. தரையில் நூறு அடி தூரத்தைத் தாண்டி பார்க்கமுடியாத விழிகள், ஆயிரம் அடிகளைத் தாண்டி எப்படி ஊடுருவ முடிந்தது? விழிகளுக்கு இந்த சக்தியை யார் கொடுத்தது? தெளிந்த விசால வானம்! திரைகள், தடைகள், குறுக்குச் சுவர்கள் இல்லாத பரந்த வெளிதான் பார்வைத்திறனின் சக்தியைப் பன்மடங்கு அதிகப்படுத்துகின்றன. சுவர்களும் திரைகளும் இல்லாத தெளிந்த விசால வானப் பார்வையைத் தெளிவுபடுத்துவதுபோல சாதி, மதக் குறுக்குச் சுவர்கள் கடந்த வாழ்க்கை, வாழ்க்கையை விசாலப்படுத்துகின்றன. இதை அனுபவித்துத்தான் புரட்சிக் கவிஞன் சொன்னானோ, "வீட்டுக்கும் வீட்டுக்கும் இடையே உள்ள சுவரினை இடித்து, வீதிக்கும். வீதிக்கும் இடையே உள்ள திரையினை விலக்கு" என்று சொன்னான் போலும்!

நமது வானூர்தி இலண்டன் மாநகர நேரப்படி 12-ஆம் தேதி பிற்பகல் 2.30 மணியளவில் இலண்டன் மாநகரத்தை அடைந்தது. இந்தியாவிற்கும் பிரிட்டனுக்கும் 5 மணி நேர இடைவெளி வேறுபாடு. உலகத்தில் எல்லாக் கடிகாரங்களும் கணக்கிட்டுக் கொள்ளவேண்டிய கிரீன்விச் ரேகை இலண்டன் மாநகரில் ஓடிக்கொண்டிருக்கிறது. உலக நாடுகளின் கடிகாரங்களின் நேரத்தைத் தீர்மானிக்கிற இலண்டன் மாநகரம்தான் உலகநாடுகளின் நேரத்தையும் (நல்ல காலம்) தீர்மானிக்கின்ற சக்தி படைத்ததாக விளங்குகிறது. இந்திய நேரத்தைவிட 5 மணி நேரம் பின்தங்கியவர்கள், வாழ்க்கைப் பொருளாதாரத்தில் இந்தியாவைவிட விரைவாக முன்னேறிவிட்டார்கள்.

அடித்தளத்து மக்களின் விடியலுக்காக ஓயாது உழைத்துக் கொண்டிருக்கின்ற நம் அறிவாலயத்து உதயசூரியனைப் போல (முத்தமிழறிஞர் மாண்புமிகு முதல்வர் கலைஞர்) பிரிட்டன் தேசத்தில்

கோடை காலத்தில் சூரியன் ஓய்வே எடுப்பதில்லை. அதிகாலை 4 மணிக்கே அடிவானம் சிவப்பாகிவிடும்! இரவு 10 மணிக்குத்தான் பகலவன் ஓய்வெடுக்கப் புறப்படுவான்!

இலண்டன் மாநகரின் விமான நிலையத்தில் நம்மையும் பேரூர் அடிகள் பெருமானையும் வரவேற்கத் திரளான மக்கள் கூட்டம்! மாநாட்டின் செயலர் செயல்துடிப்புமிக்க அன்பு நிறைந்த கணேசமூர்த்தி, இலக்கியமே வாழ்வாய் வாழ்ந்துகொண்டிருக்கும் சிவம் பரப்பும் சீலர் சிவானந்த ஜோதி, நட்பின் உருவாய் விளங்கும் தம்பு, அன்புக்குரிய சச்சிதானந்தம், தருமை தந்த திருமுறைமாமணி சாமிதண்டபாணி இப்படி நிறைய அன்பு உள்ளங்கள் இதயம் நிறைந்த கசிந்த அன்பால் வரவேற்று மகிழ்ந்தன!

இலண்டன் மாநகரம்! இந்தியாவின் தலைநகரை இலண்டனிலிருந்து தில்லிக்கு இடமாற்றம் அடையச் செய்த மகாத்மாவின் பாதம்பட்ட மண் அல்லவா! இந்நாட்டில் பாதம் படுமுன் சத்தியத்தின் சத்தியம் (மகாத்மா) மது, மாது, மாமிசத்தைத் தீண்டமாட்டேன் என்று தம் அன்னையிடம் சத்தியம் செய்தது! சிலவயிறுகள் மாமிச மலையைச் சுமக்கும்! சில வயிறுகள் மனிதனைச் சுமக்கும்! அரிய சில வயிறுகளே மனிதப் புனிதனைச் சுமக்கும்! அப்படி தேவமைந்தனைக் கருவாய்ச் சுமந்தவர் அன்னை புத்லிபாய்!

பீரங்கியாலும் வெடிமருந்துகளாலும் வெல்ல முடியாத - சூரியன் மறையாத சாம்ராஜ்யத்தை ஆண்டவர்கள், தாங்களே ஆண்டவர்கள் என்று அறைகூவியவர்கள், பொக்கைவாய்க் கிழவனின் அகிம்சை ஆயுதத்தின் முன்னால் தோற்றுப்போகிறார்கள். இரும்புச் சங்கிலியின் வலிமையை உடைத்தெறிபவர்களை, கை ராட்டையின் சின்ன நூற்கண்டு சிறைப்படுத்தியது. அகிம்சை ஆயுதத்தை முதன் முதலில் உலகத்திற்குப் போதித்த புத்தன் (காந்தி அண்ணல்) கால்பட்டதால் புனிதம் பெற்ற மண்ணில் கால் பதித்ததில் மட்டில்லா மகிழ்ச்சி!

மாநாட்டுச் செயலர் கணேசமூர்த்தியும் அவரின் நண்பர்களும் நம்மை வரவேற்க விமானநிலையம் வந்திருந்தார்கள், கணேசமூர்த்தியின் பாசநெஞ்சை நன்கு உணரமுடிந்தது. கணேசமூர்த்தியின் இல்லம் சிறியதுதான்! ஆனால் விசால மனம் படைத்தது! வந்தாரை வரவேற்று உபசரிக்கும் மகத்தான விருந்தோம்பல் பண்பில் கணேசமூர்த்தி, திருமதி. தேவி கணேசமூர்த்தி இருவரும் தலைசிறந்தவர்கள். நமது நாட்டில் நாகரிகத்தின், செல்வத்தின் வளர்ச்சியால் தங்கும் விடுதிகள் வளர்ந்துள்ளன. அறுசுவை உணவு பரிமாறப்படுகின்றது. திரு. சணேசமூர்த்தியின் இல்லத்தில் உணவோடு அன்பு உணர்வும் கலந்து

பரிமாறப்படுகின்றது. இங்கிலாந்தின் இளையான்முடிமாற நாயனார் இல்லமாக கணேசமூர்த்தி இல்லம் கடமையாற்றுகின்றது. பத்து நாள்களும் ஈரம் நிறைந்த தாயன்பை உணரமுடிந்தது. திருச்சி அருள்நெறித் திருக்கூட்ட மாதர்சங்கத் தலைவர் பேபி செல்லமணி அம்மாள் அவர்கள் புதல்வர் சியாம்சுந்தர் அயர்லாந்தில் இருந்து விமானத்தில் வந்து நமக்கு இலண்டனில் பார்க்கவேண்டிய இடங்களைச் சுற்றிக்காட்டி தம் நேரத்தையும் பணத்தையும் செலவழித்து ஆழமான அன்பினை வெளிப்படுத்தினார். அந்த ஆழமான உண்மையான அன்பிற்கு என்றும் நன்றிக்கடப்பாடு உடையோம்.

இலண்டன் மாநகரில் இரண்டு நாள்கள் உலக சைவ சமய மாநாடு கோலாகலமாக நடைபெற்றது. முதல்நாள் மாநாடு சிறப்பாக நடைபெற்றது. பேரூர் அடிகள் பெருமான் மாநாட்டுக்குத் தலைமை வகித்தார்கள். தொடக்க நாளன்று நாம் சிறப்புரை ஆற்றினோம்! இங்கிலாந்து வாழ் தமிழர்கள் மகிழ்ந்தும் நெகிழ்ந்தும் உணர்ந்தும் உரை கேட்டனர். மாநாட்டு நிகழ்ச்சியைத் தொகுத்து வடித்த வாரியார் சீடரும் தமிழ் இலக்கிய ஆர்வலருமாகிய ஸ்ரீரங்கன் நம் உரையை கேட்டுத் நெகிழ்ந்து பாராட்டினார். இரண்டாம் நாள் மாநாட்டு நிறைவு நிகழ்ச்சியில் பல சிந்தனைகள் உரையாடப்பட்டன. "அனைத்துச் சாதியினரும் அர்ச்சகர் ஆகலாமா?" என்ற வினா வழி, நாம் தந்த விளக்கங்களில் மனநிறைவும் அதை ஏற்றுக்கொள்ளும் பக்குவமும் அடைந்தனர். இறைவழிபாட்டினை நிகழ்த்தத் தகுதி உடையவர்கள் சாதி என்ற ஒரே காரணத்திற்காக மறுக்கப்படுவதும் சாதியின் அடிப்படையிலே மட்டும் எல்லாத் தகுதிகளும் அமைந்துவிடுகின்றது. இறைவழிபாட்டினைச் செய்து வைப்பதற்குச் சாதி ஒன்றுதான் தகுதி என்பதும் ஏற்க இயலாதது. சாதிகளுக்கு அப்பாற்பட்டுத் தகுதியும் சீலமும் உடையவர்கள் இறைவன் திருமேனியைத் தீண்டிப் பூசித்த வரலாறுகள் உண்டு.

"மாதர்ப்பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும் பாடிப் போதொடு நீர்சுமந்தேத்திப் புகுவார்அவர்பின் புகுவேன்" என்ற அப்பர் பெருமான் பாடல் பக்தி உணர்வுடன் எல்லோரும் இறைத் திருமேனியைத் தீண்டி வழிபடுகின்ற உரிமையைப் பெற்றதைச் சுட்டிக் காட்டுகின்றது. பக்தி உணர்வுடன் கண்ணப்பன் நடத்திய பூசை இறைவனுக்கு இன்பத்தையும் மகிழ்வையும் தந்தது! எல்லா உயிரினங்களும் இறைவனைப் பூசித்ததை இறைவன் ஏற்று மகிழ்ந்தான்! மனிதர்கள் மாத்திரமல்ல. எறும்புகள், யானை, சிலந்தி என்று உயிர்க்குலம் அனைத்தும் இறைவனைப் பூசித்து வழிபாடு செய்திருக்கின்றன. காலம் காலமாய் இருந்து வந்த சமய உலகத்தின் பக்தி உணர்வுடன் கூடிய

வழிபடும் உரிமை மறுக்கப்படுவது வேதனைக்குரியதாக இருக்கின்றது. மீண்டும் திருநாளைப்போவார், கண்ணப்பநாயனார் மரபில் வந்தவர்களும் திருக்கோயில் கருவறைக்குள் நுழைகின்ற நாள் நோக்கி தவம் செய்வோம்!

இலண்டன் மாநகரில் நடைபெற்ற உலக சைவமாநாடு மிகச் சிறந்த ஆன்மிக வெளிச்சத்தின் விசாலப்பார்வையை தெளிவாகக் காட்டியது.

இலண்டன் மக்களின் சில நல்ல பழக்கங்கள் நாம் கடைபிடிக்க வேண்டிய முன் உதாரணங்கள். அவர்கள் எதிலும் ஒழுங்குமுறையைக் கடைப்பிடிக்கிறார்கள். வாடகை மகிழ்வுந்திற்குக் காத்து நிற்போர் இரண்டு பேராக இருந்தாலும் வரிசையில் தான் நிற்கின்றார்கள். முண்டியடித்துக் கொண்டு முன்னே இருப்போரைக் கீழே தள்ளிவிட்டு ஓடுகின்ற பழக்கம் அவர்களிடம் இல்லை. இரண்டு பேராக இருந்தாலும், முன்னே வந்தவர் முதலிலும், பின்னே வந்தவர் பின்பும் நிற்கின்ற ஒழுங்குமுறை உண்டு. சாலை பொது இடங்களில் தூய்மை பேணுகின்றனர். தெரு ஓரத்தை பொது இடங்களை அசுத்தப்படுத்தாத மக்கள்! சாதாரணமாக 150 கி.மீ வேகத்திற்கு மேல் ஓடுகின்ற வாகனங்கள் சாலை விபத்துக்களை சந்திப்பதே இல்லை!

வீட்டில் இருக்கும் ஒவ்வொரு குழந்தைக்கும் கூட மகிழ்வுந்து வைத்திருக்கிறார்கள். போக்குவரத்து விதியை முறையாக கடைப்பிடித்து மகிழ்வுந்து முறைப்படி வரிசையாக நிறுத்தப்படுகின்றன. இலண்டன் மாநகரில் வாழும் நம் தமிழர்கள் குறிப்பாக சைவமும், தமிழும் வளர்க்கும் ஈழத் தமிழர்கள் தங்கள் தாயகம் அமைதிபெற வேண்டும் என்று பரிதவிக்கின்றார்கள். எழுத்தில் வடிக்க முடியாத அவர்கள் சோகத்திற்கு இந்தியாவின் மத்திய மாநில அரசுகள் தீர்வுகாண வேண்டும் என்று ஏக்கத்தோடும் பேரன்போடும் கூறுகின்றார்கள்! இங்கிலாந்து நாட்டில் தங்களைக் காத்துக்கொள்ள பாதுகாப்போடு வாழும் தமிழர்கள், தமிழர் கலாச்சாரத்தையும் தமிழர் நாகரிகத்தையும் பாதுகாக்க வேண்டும். தங்களின் இளைய தலைமுறை தங்கள் கலாச்சாரத்தை மறந்துவிடக் கூடாது என்ற பயத்துடன் வாழ்கின்றனர். மொத்தத்தில் நமக்கு இலண்டன் பயணம் விரிந்து பரந்த விசாலவானத்தில் பாதையின் தெளிவைத்தந்தது. நம் சமய உலகத்தின் பாதையும் தெளிவு பெறவேண்டும் என்ற ஆதங்கத்தோடு நம் பயணம் தொடர்கின்றது.

நன்றி!

[signature]

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 66. வினைத்தூய்மை

வினை ஒருவன் செய்யும் செயல் - தொழிலைக் குறிக்கும். "எது வினை?" என்பான் கம்பன். செய்யும் செயலின் - தொழிலின் தூய்மையாவது செய்யும் தொழிலைப் பிழைப்பாகக் கருதாமல் மனிதநேயத்தை மையமாகக் கொண்டதாக மனிதர்களுக்குப் பயன்தரக் கூடியதாக அமைதல். மானுட வாழ்வியலின் மேம்பாட்டுக்குரிய அறம், பொருள், இன்பம் பயப்பனவாக அமைதல் வேண்டும்.

சொற்கள் வினைத்தூண்டுதலுக்குரியன. அதனால் சொல்வன்மையைத் தொடர்ந்து வினைத்தூய்மை சொன்னார்.

*துணைநலம் ஆக்கம் தருஉம் வினைநலம்*
*வேண்டிய எல்லாம் தரும்.* (651)

ஒருவருக்கு அமைந்த துணை, செல்வம் தரும். வினைத்தூய்மை வேண்டுவன எல்லாம் தரும்.

துணையின் பயன்பாட்டளவு எல்லைக்குட்பட்டது. ஆனால், வினைத்தூய்மை பலரை ஈர்க்கும். பலப்பல பயனைக் கூட்டும். அதனால், துன்பத்தின் காரண காரியங்களை அறிந்து அவற்றை ஆள்வினைத் திறனுடன் சந்தித்து மாற்றுதலேயாம்.

இன்று வினைநலமின்மை ஆக்கந் தருகிறது. சுரண்டுதல், வினைநலமற்றது. இத்தகு தீவினை இயற்றுவோர் இன்று வாழ்கின்றனர். (வாழாது வாழ்கின்றனர்) மக்கள் விழித்தெழுக..

*என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு*
*நன்றி பயவா வினை.* (652)

புகழினையும், அறத்தினையும் தராத தீவினைகளை என்றும் ஒழித்திடுதல் வேண்டும்.

அறத்தினையும் புகழினையும் தராத செயல்களை ஒழித்திடுக. காலம், சூழ்நிலை, வினைகளைப் பாராமல் ஒழித்திட வேண்டும் என்பதற்காகத் தற்காலிக நன்மைகளைக் கருதிக்கூட நன்றி பயவாவினை செய்தல் கூடாது என்பதனை வலியுறுத்த "என்றும்" என்றார்.

"நன்றி" - நன்மை. ஆக்கம் என்பாரும் உளர். ஆக்கமும் நன்மை தருவதேயாம்.

*ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை*
*ஆஅதும் என்னு மவர்.* (653)

தாம் மேன்மையுறுதல் வேண்டும் என்று கருதுவோர், புகழ்கெடும் செயல்களைச் செய்தலைத் தவிர்க்க வேண்டும்.

ஓஓதல் - ஒவ்வுதல் - தவிர்த்தல்.

*இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்*
*நடுக்கற்ற காட்சி யவர்.* (654)

அச்சம் இல்லாத தெளிந்த அறிவினையுடையவர், துன்பத்துள்படினும் பழிசுமக்கும் காரியங்களைச் செய்யார்.

துன்பத்திற்கு முறையான தீர்வு காண்பதே முறை. பழிசுமக்கும் வழிகள் மூலம் துன்பத்திற்குக் காணப்பெறும் தீர்வு மேலும் துன்பத்தைத் தரும்.

*எற்றென்று இரங்குவ செய்யற்க செய்வானேல்*
*மற்றுஅன்ன செய்யாமை நன்று.* (655)

தான் செய்த செயல்களின் எதிர் விளைவுகளைக் கண்டு "என்ன செய்தோம்?" என்று கழிவிரக்கப்படக்கூடிய செயல்களைச் செய்யற்க. மீண்டும் கழிவிரக்கத்திற்குரிய செயல்களையே பழக்க வாசனையால் செய்வானாகில் அவன் யாதொன்றும் செய்யாதிருத்தலே நன்று.

"முன்னால் செய்த காரியங்களைச் செய்ததுபோல் பின்னும் செய்யாதொழிவது நன்று" என்ற உரை "செய்வானேல்" என்று கூறியிருப்பதால் பொருந்தாது.

"மற்றன்ன"- என்றது பிழை வருதலுக்குரியனவல்லாத பிறதுறைப் பணிகள் என்று கொள்வது சிறப்பு.

*ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க*
*சான்றோர் பழிக்கும் வினை.* (656)

பெற்றெடுத்த தாயின் பசித் துன்பத்தைக் கண்டாலும் தாயின் பசியை நீக்கும் பொருட்டுப் பெரியோர் பழிக்கத்தக்க செயல்களைச் செய்யற்க.

"துன்பத்தில் எல்லை பெற்ற தாயின் பசி" என்பது ஆசிரியர் கருத்து. பெற்ற தாயின் பசி பற்றிக் கவலைப்படாதோர் இன்று உளர்.

*பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்*
*கழிநல் குரவே தலை.* (657)

பழிகளுடன் வரும் ஆக்கத்திலும் பெரியோருக்கு வறுமையே உயர்வு.

"வறுமையின் காரணமாகப் பழிப்பதற்குரிய செயல்களை ஏற்கலாம்; மன்னிக்கலாம்" என்ற கொள்கையை மறுத்தது.

*கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு அவைதாம்*
*முடிந்தாலும் பீழை தரும்.* (658)

அறநெறியின் ஆகாவென ஒதுக்கிய செயல்களைச் செய்தார்க்கு அவை நிறைவெய்தா. ஒரோவழி நிறைவெய்தினாலும் துன்பத்தைத் தரும்.

"முடிந்தாலும்" என்பது, ஒரோவழி அறமல்லாதவை வெற்றி பெறும் என்ற உலகியற்கை உணர்த்தியது.

*அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்*
*பிற்பயக்கும் நற்பா லவை.* (659)

பிறர் அழக்கொண்ட பொருள்கள் அழவைத்துவிட்டுப் போய்விடும். பிறர் மகிழத் தேடிய பொருள்கள், இழந்தாலும் திரும்ப வரும்.

"அழக்கொண்டவை" மற்றவர் வருந்தி உழைத்த உழைப்பில் உருவாக்கிய செல்வத்தை உரிய ஊதியம் தராமல் எடுத்துக்கொண்ட பொருள்.

சுரண்டப்படாமல் தப்பித்துக் கொள்வதற்குரிய அறிவு வந்தபொழுது உழைக்காமல் பெற்ற செல்வமுடையார் அவற்றை இழக்க நேரிடுதல் இயற்கையின் நியதி.

*சலத்தால் பொருள்செய்துஏம் ஆர்த்தல் பசுமண்*
*கலத்துள்நீர் பெய்துஇரீஇ யற்று.* (660)

சூழ்ச்சிகள் மூலம் பொருளீட்டிப் பாதுகாக்க முடியும் என்று எண்ணுவது சுடப்பெறாத பச்சை மண் சட்டியில் தண்ணீரைச் சேமித்தது போலவேயாம்.

சுடாத பச்சை மண் சட்டியில் தண்ணீர் நிற்காது.

சலத்தால் பொருள் செய்தலாவது; உழைப்பிற்கேற்ற ஊதியம் தராது பொருள் ஈட்டல்; விற்கும் பொருள்களில் கலப்படம் செய்தல்; விற்கும் பொருள்களின் அளவைக் குறைத்தல்; கொள்முதலில் விலையைக் குறைத்தல்; அதிக வட்டி வாங்குதல் முதலியன.

பண மதிப்பீட்டுச் சமுதாயம் இருக்கும் வரை, சலத்தால் பொருள் செய்தலை மக்கள் கைவிடமாட்டார்கள் என்பதே வரலாறு காட்டும் உண்மை.

(தொடரும்)

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

- ஆசிரியர்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "கம்பன் என்றொரு மானிடன்"

(தமிழாகரர்.பேராசிரியர்.**சாமி. தியாகராசன்**)

## தென்றல் எனும் தேவன்

தென்றல். இந்தக் காற்றைப் போற்றிப் பாடாத புலவர்களே இல்லையெனும்படிப் புலவர் நாவில் பொருந்திய இந்தக் காற்று ஏனோ சங்கப் புலவர்கள் நாவில் பொருந்தவில்லை. எட்டுத்தொகை பத்துப்பாட்டு எனப்படும் சங்க இலக்கியங்களில் தென்றல் காற்று சிறப்பித்துப் பேசப்படவில்லை என்பது ஓர் ஆச்சரியமான செய்திதான். காதலரைப் பிரிந்து இருப்போரை வருத்துவது வாடைக்காற்று மட்டுமே எனக் கூறும் சங்கப் புலவர்கள் தென்றலை அந்த இடத்தில் வைத்துப் பார்க்கவில்லை. வாடையின் தன்மையைக் கூறுவதற்கு என்றே "நெடுநல்வாடை" என்ற பெயரில் ஓர் இலக்கியம் தோன்றியது. பிரிந்து இருப்போரைத் தென்றல் வருத்தும் எனக் கருதாத சங்கப் புலவர்கள் காதலரைக் கூடி இருப்போரைத் தென்றல் மகிழ்விக்கும் என்று சொன்னார்களா எனில் அதுவும் இல்லை; ஆக மொத்தத்தில் தென்றல் அவர்களால் மறக்கப்பட்டது என்பது என்னவோ உண்மைதான். அவர்கள் காலத்தில் தென்றல் இல்லாமலா இருந்திருக்கும்? கட்டாயம் இருந்திருக்கும். சங்க இலக்கியத் தொகுப்பில் காலத்தால் பிற்பட்டது எனப்படும் பரிபாடலில் "தென்றல் அசைவரூஉம் செம்மற்றே - அம்ம" (8:27) எனத் தென்றல் பேசப்படுவதைக் கொண்டு அதனை அறியலாம்.

"அழல்போலு மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை" (குறள்.1228)

என்னும் இக்குறள் "முன்னெல்லாம் இனிதாக ஒலித்த இடையன் புல்லாங்குழல் இப்போது தீப்போலச்சுடும் மாலைப்பொழுதிற்கு முன்தூதாக வந்து என்னைக் கொல்வது போலத் துன்புறுத்தும் படைக்கலமும் ஆயிற்று" என்கின்றது. காதலனைப் பிரிந்த தலைவிக்கு மாலைக்காலமும், அம்மாலைக்காலத்து இடையன் குழலும் துன்பத்தைத் தருவனவாக அமைந்துள்ளன எனக் கூறும் திருவள்ளுவரும் மாலைக் காலத்தோடு தொடர்புடைய தென்றலைப் பற்றிக் கூறவில்லை என்பதை எண்ணும்போது வியப்பாகவே உள்ளது.

சங்கப் புலவர்களும் திருவள்ளுவரும் மறந்துவிட்ட தென்றல் காற்றுக்கு முதலில் வாழ்வளித்து அதனைப் போற்றிக் கைக்கொண்டவர் ஆசிரியர் இளங்கோவடிகளாவர். தாம் இயற்றிய சிலப்பதிகாரத்தில் தென்றலை அவர் மிகச் சிறப்பாகச் சீராட்டியிருக்கின்றார். காதலரைக் கூடியிருப்போருக்குத் தென்றல் சுகம் தருவதையும், காதலரைப் பிரிந்து இருப்போருக்குத் தென்றல் வருத்தத்தைத் தருவதையும் தமது வித்தகப் புலமையின் கைவந்த சொற்களால் அவர் வருணிக்கும் திறம் மிகவும் பாராட்டத்தக்கதாகும். மேலும்

"நகையா டாயத்து நன்மொழி திளைத்துக்
குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
திரிதரு மரபிற் கோவலன் போல
இளிவாய் வண்டினொ டின்னிள வேனிலொடு
மலய மாருதம் திரிதரு மறுகில்"

(இந்திரவிழா ஊர் எடுத்தகாதை. 191-203)

எனச் சொல்வதின் மூலம் பொதியத் தென்றல் பூம்புகார் வீதியில் திரிவதை நாம் அறிந்து கொள்கின்றோம். இதன் வழி புகார்த் தென்றல் பேசப்படுகிறது. இதைப் போன்றே ஆசிரியர் இளங்கோவடிகள் புறஞ்சேரி இறுத்த காதையில்

"புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பின்
பொதியில் தென்றல் போலா தீங்கு
மதுரைத் தென்றல் வந்தது காணீர்" (130.132)

எனச் சொல்வதின் மூலம் மதுரைத் தென்றலை நமக்குக் காட்டுகின்றார்.

பொதிகை மலைத் தென்றல் மதுரைத் தென்றலாகவும், புகார்த் தென்றலாகவும் மாறிய விதத்தை விளக்கும் இளங்கோவடிகள் வஞ்சித் தென்றல் என்ற ஒன்றைச் சொல்லவில்லை என்பதை நாம் எண்ணிப்பார்க்கவேண்டும். தமிழ்நாட்டின் தென்பகுதிக் கடலிடை உள்ள பொதிகை மலையிலிருந்து தோன்றும் தென்றல் வடக்கு நோக்கி நகர்ந்து பாண்டிநாடு, சோழநாடு ஆகியவற்றில் புகுந்து வீசுகிறது.

ஆனால் சேரநாட்டிற்குள் செல்வதில்லை. ஏன்? தமிழ்நாட்டின் மேற்குப் பகுதியில் உள்ள மேற்குத் தொடர்ச்சி மலைகள் மென்மையாக வீசும் தன்மையைக் கொண்ட இக்காற்றைத் தடுக்கும் அரணாக அமைந்துள்ளன. இயற்கையின் இத்தகைய அமைப்பால் அம்மலைத் தொடரைத் தாண்டித் தென்றலால் செல்லமுடிவதில்லை. இந்த நில இயல்பை நன்குணர்ந்த இளங்கோவடிகள் வஞ்சி நகரின் மாலைக் காலத்தை வருணிக்கும் போது தென்றலைப் பற்றிப் பேசாமல் சென்றுவிடுகின்றார்.

தமிழகத்தின் நில இயல்பை நன்குணர்ந்து சேரநாட்டில் தென்றல் காற்றுக்கு வேலை இல்லை என்பதால் அது பற்றிக் கூறாமல் இளங்கோவடிகள் திறம் இவ்வாறு இருக்க; நமது கம்பனோ தென்றலை அறியாத இப்படி ஒரு காற்று உண்டு என்பதைத் தெரியாத வடக்கே ஆயிரக்கணக்கான மைல் கற்கள் அப்பால் உள்ள மிதிலைக்கும் நடுவில் உள்ள பஞ்சவடிக்கும் தெற்கே உள்ள இலங்கைக்கும் தென்றலைக் கொண்டு சென்றுவிடுகின்றான்.

கம்பன் கதையும் அவன் கற்பனையும் காலதேச எல்லையைக் கடந்தன என்பதாலும், அயோத்தியையும், மிதிலையையும் பார்த்துள்ளான் என்பதாலும், கவிஞர்களுக்கே உரிய கவித்துவ உரிமையைப் பெற்றவன் என்பதாலும் நில இயல்பை மறந்து பேசுகின்றான் என்ற குறையைப் பெரிதுபடுத்தாமல் தென்றல் காற்றை அவன் கையாண்டுள்ள திறத்தை மட்டும் பார்ப்போம்.

(தொடரும்)



# அருளாலயத் தங்கம்

(தமிழாகரர். **தெ. முருகசாமி**, புதுச்சேரி - 9)

தங்கத்தின் விலையில் ஏற்றத்
        தாழ்வெனும் நிலையைப் பார்த்தால்
தங்கத்தின் மீதி ருக்கும்
        தாழ்விலா ஆசை தானும்
தங்கட்கு வாரா வாறு
        தாழ்ந்திடும் போலும்! என்றே
தங்கட்குள் பேசிக் கொண்டார்
        தாழ்குரல் பெண்க ளெல்லாம்!

மண்டிடும் நமது நாட்டின்
        மரபினை எண்ணிப் பார்த்தேன்
கொண்டிடும் தங்க வேட்கை
        குறைவிலா எண்ணத் தாலே
அண்டிடும் ஆசைக் குத்தான்
        அளவிலை போலும்! நாளும்
உண்டிடும் உணவின் மேலாய்
        உள்ளதற் கென்சொல் வேனோ?

புதுப்புது எண்ணத் தாலே
        பொலிந்திடும் மேலை நாட்டுக்
[1]கதுப்புறு பெண்க ளெல்லாம்
        கனத்திடும் தங்கந் தன்னில்
[2]விதுப்புறு நாட்டந் தன்னை
        விரும்பியே கொள்வ தில்லை!
[3]சதுப்புறு நிலமா னாலும்
        சலிப்பிலா அழகைப் போல!

ஆதலால் நமது நாட்டின்
ஆரணங் கெல்லாம், தீராக்
காதலால் தங்கந் தன்னில்
[4]காழ்த்திடும் மோகந் தன்னைச்
[5]சாதலாய் ஆக்கிக் கொண்டு
சாதனை புரிந்தால், காற்று,
ஊதலால் உப்பும் பந்து
ஓட்டையால் உருளா தன்றோ!

என்றேநான் நினைத்துப் பார்த்தேன்
எனதுமனச் சாட்சி தானும்
நன்றேநின் நினைப்பென் றாலும்
நடைமுறையில் அவர்போல் ஆதல்
என்றே?என் றெனக்குக் கூறி
இருங்கடலின் அலையோய்ந் திட்டால்
அன்றேநீ குளிக்க லாகும்!
அருமையும் விளக்கிற் றன்றே!

மாற்றியே எண்ணிப் பார்த்தேன்
"மாறாத தங்க ஆசை
மாற்றிட வழியா தென்றே?"
மாற்றமாய் நினைத்த போது
ஏற்றிட வேண்டும், எந்த
எதிர்பார்ப்போ டெதிர்ப்பை யெல்லாம்!
சாற்றிய நெஞ்சத் தோடே
சற்றேநான் சிந்தித் தேனே!

புன்னகை யிருக்கும் போது
பொன்னகைதான் எதற்கென் றாலோ,
புன்னகை வாழ்நா ளெல்லாம்
பொலியாமல் ஒருகா லத்தில்
புன்நகை ஆகி விட்டால்
புண்ணாம்வாழ் வென்ப தாலே
பொன்னகை வேண்டு மென்பார்
பொலிவான பெண்க ளெல்லாம்!

எந்நகை செய்தா லும்மே
எடுத்திடும் சேதா ரம்போல்
என்நகை யான நீதான்
எந்தச்சே தாரம் இல்லாப்
பொன்னகை தாரம் என்று
புகழ்ந்திடச் செய்தா லும்மே
மன்நகை தங்கந் தன்னில்
மனைவியர்க் காசை நீங்கா!

விலைவாசி யேற்றத் தாலே
வாங்கிடும் தங்கந் தன்னை
நிலையாக வீட்டில் வைத்து
நீண்டநாள் பாது காத்தால்
வலைவீசி திருடர் தாமும்
வாட்டமின்றித் திருடிச் செல்ல,
நிலையில்லா தாகும்! அஃதாய்
நீஆக மாட்டாய் என்றே;

மனைவியாம் தங்கத் தின்கண்
மாண்புடனே சொல்லிப் பார்த்தால்
தினையள வான தான
தீக்குச்சி, தீப்பந் தத்தைப்
பனையள வெரியச் செய்யும்
பான்மைபோல் மனைவி நெஞ்சில்
நினைந்திடும் உவமை யாலே
நீண்டதோர் உண்மை தோன்றும்!

தங்கத்தின் மீதிவ் வாறு
தரக்குறை விருப்ப தாலே
அங்கமுறும் வாழ்க்கை தன்னில்
அசலான மனைவி மீது
பொங்கிடும் அன்பால் சொக்கிப்
பொலிவான இல்ல றத்தைப்
பங்கமற நடத்தும் ஆண்தான்
பழுதிலா சொக்கத் தங்கம்!

ஏனென்றால் நாட்டில் காணும்
எங்குமுள மதுக்கடை தன்னை
ஏறிட்டுப் பார்க்கா வாறு
என்மனைவி மக்கள் என்னும்
ஏரான குடும்பந் தன்னை
எழிலாகக் காப்பே னென்று,
[6]ஏமமுடன் எண்ணு கின்ற
என்கணவன் தங்கந் தானே!

இவ்வாறாய் ஆண்பெண் கொள்ளும்
இதயத்து நினைப்பை யெல்லாம்
செவ்வியதோர் இணைய தளத்துத்
தகவல்போல் அறிந்த ஒருவர்
"அவ்விதமாய் இருங்கள்" என்றே
அருளாசி மொழியக் கண்டேன்
கவ்வியநற் கனவில்! குன்றக்
குடியான அருளா லயத்தே!

1. கதுப்புறு - குட்டையான தலைமுடியுடைய 2. விதுப்புறு - விரைவான 3. சதுப்புறு - சேறான 4. காழ்த்திடும் - அதிகமாகக் கொள்ளும் 5. சாதலாய் - இல்லாமையாக 6. ஏமமுடன் - இன்பமுடன்

### மொழிப்போர்த் தியாகி
## விராலிமலை சண்முகத்தின் நினைவுநாள்

1965 ஆம் ஆண்டு நடைபெற்ற மொழிப்போராட்டத்தில் தமிழ்மொழியைக் காக்கத் தீக்குளித்தும் பிறவகையிலும் உயிர் துறந்த தியாகிகள் பலர். அவர்களுள் விராலிமலை சண்முகம் என்ற இளைஞரும் ஒருவர். பேரறிஞர் அண்ணா அவர்களுக்கும், தன் குடும்பத்தினருக்கும் தமிழ்காக்க நஞ்சுண்டு இறக்கப் போவதாகக் கடிதம் எழுதிவைத்துவிட்டு நஞ்சுண்டு அவர் 11.8.65 –இல் உயிர் நீத்தார். அவரது நினைவு நாள் ஆகஸ்ட் 11. அவரை நினைகூர்ந்து "மக்கள் சிந்தனை" போற்றுகிறது.

– ஆசிரியர்

# "ஆரியப் புத்தகப் பேய்"

(தா. குருசாமி தேசிகர் தருமையாதீனப்புலவர், மதுரை)

"வடமொழியும் பின்னர் வந்த, ஆங்கிலமும் தமிழின் வாழ்வைக் கவர, இடையறாது முயன்று வந்துள்ளன. முயன்றும் வருகின்றன. ஆயினும் தமிழ் திடமொழிந்து தேம்பி நிற்கவுமில்லை. தேய்வேனோ! மாய்வனோ? என்று திகைத்திடவுமில்லை. எல்லை சுருங்கினும், அல்லல் பெருகினும் "எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடி இருக்கின்ற" - எம் உயிரினும் இனிய தீந்தமிழ், தன் பகையோடு போராடிய நேரத்திலும், தன் மக்கள் வகையோடு வாழ்வதற்கான வழிகளையும் வழங்கியுள்ளது"

என்று "அனிச்சஅடி" நாடக நூலின் ஆசிரியர் புலவர் திரு. ஆ. பழநி அவர்கள், குறிப்பிடுங் கருத்து தமிழ்மொழி வாழ்வு பற்றி நம்மைச் சிந்திக்கவைக்கிறது.

கேளிக்கை வரிவிலக்கு

தமிழக அரசு இவ்வாண்டு சமர்ப்பித்த முதல் (பட்ஜெட்) திட்டமிட்ட செயல் அறிவிப்பில், - "தமிழில் திரைப்படங்களின் பெயர்த்தலைப்பு அமைந்திருந்தால் கேளிக்கவரி விலக்கு வழங்கப்படும்" - என்று தெரிவித்திருப்பதிலிருந்து, ஆரியம் போல, "ஆங்கிலம்" இந்நூற்றாண்டில் தமிழனை அடிமைப்படுத்தியிருப்பதை ஓரளவு உணரலாம். ஆங்கில எழுத்துக்களைத் தமிழர் தம் பெயரின் முன்பு (Intial) (உதாரணம் T.N. வேலு) த.ந.வேலு எனத் தமிழ் எழுத்தால் எழுதாமல் டி.என்.வேலு எனத் தமிழ் எழுத்தால் ஆங்கில எழுத்துக்களையும், ஆங்கில எழுத்தை அப்படியே எழுதியும் வேறுபாடில்லாமல் எழுதுவது தமிழ்நாட்டைத் தவிர வேறு எந்நாட்டிலும் இல்லை.

"வடசொற்கிளவி வடவெழுத்து ஓரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகுமே"

என்ற தொல்காப்பிய நூற்பா வரையறை செய்தும் நம் தமிழ்நாட்டில் மணிப்பிரவாள நடை எல்லை தாண்டி நடைபயின்றது.

## தமிழினத் தவிப்பு

"பிரஞ்சு நாவலாசிரியர் வித்தர் யூகோ" (Victor Hugo) தாம் எழுதிய "நகையாளன்" (LAUGHING MAN) என்ற நெடுங்காதையில் "கொம்பராசிகோ" (COMPRCHICOS) என்ற கொடியவர் கூட்டம் ஐரோப்பாவில் செல்வர் வீட்டுப் பிள்ளைகளைக் கவர்ந்து சென்று, உருவத்தைச் சிதைத்தும் பெயரை மாற்றியும் வேடிக்கை காட்டிப் பொருள் ஈட்டுவராம்; பெற்றோர்கள் தம்பிள்ளையை நேரில் காணநேரினும் தம்பிள்ளையென்று கண்டறிய முடியாதாம்.

உருவத்தை மாற்றுவதில் திறமைமிக்க அரதிகானன் (Hardqui - NONE) என்ற அறுவை மருத்துவன் அந்நாளில் புகழ்பெற்று விளங்கினானாம். இவற்றைப்படிக்கின்ற பொழுதெல்லாம் உருமாற்றத்திற்கான, குழந்தைகளை நினைக்கின்ற பொழுதெல்லாம் எனக்குத் தமிழன் நினைவுதான் வரும். தமிழே! உன்னைச் சுற்றிலும், ஒரு கொம்பராசிகர் கூட்டம் இருக்கின்றதேயம்மா! "அரதிகானன்கள்" அறுவைக் கருவியோடு நீ, ஈன்றெடுத்த, கலைக் குழந்தைகளைச் சுற்றி வருகிறார்களே? என்ற "அனிச்ச அடி" நூலாசிரியரின் தவிப்பினைத், தமிழனின் வாழ்வியலுக்கு இன்றும் பொருந்திவருவதாக எண்ணினேன். தமிழிசையில் "புறநீர்மை" - என்றால் தெரியாது. "பூபாளம்" என்றால் புரியும். "முதுகுன்றம்" என்றால் தெரியாது; "விருத்தாசலம்" என்பது புரியும்."சிதம்பரம்" "கும்பகோணம்" என்றால் தெரியும். அதே தமிழ்ப் பெயர் "சிற்றம்பலம்" "குடமூக்கு" என்றால் இன்றைய பட்டதாரிகளுக்கே தெரியாது.

## பெயர் மாற்றம்

ஐரோப்பிய அரதிகானன் உருவத்தைச் சிதைத்துப் பெயரை மாற்றியதுபோலவே, தமிழ்நாட்டு அரதிகானனும் தமிழ்ப்பெயர்களைத் திரித்துப் பெயரை மாற்றியுள்ளான். தமிழன் தன்னுடைய கலையையே இனங்கண்டுகொள்ளாமல் தவிக்கிறான். முரசு, பறை, கொக்கரை, ஒழிந்து இன்று ஆங்கில பேண்டு வாத்தியத்திற்கு அடிமைப்பட்டுவிட்டான். தன் வாத்தியங்களை கைகழுவிவிட்டான்.

## இருண்ட காலம்

தமிழக வரலாற்றில் "இருண்ட காலம்" கருநாடக தேசத்து அரசர்கள் தமிழகத்தை ஆண்டகாலம் என்பர். சான்று, மூர்த்திநாயனார் வரலாறு! களப்பிரர்கள் மூவேந்தர்களை வென்று அடிமைப்படுத்தினர். இவர்கள் மூன்று நூற்றாண்டுகள் தமிழகத்தை ஆண்டுள்ளனர். இவர்கள் ஆட்சியில் சமண சமயமும் சமற்கிருதமும் வளர்ந்து வட்டாரச் சமயங்களையும் (தமிழக வரலாறும் பண்பாடும் - வே.தி.செல்வம் பக்கம்.180) மொழியையும் பின்னால் தள்ளின. தமிழகத்தில் ஊர்ப்பெயர்களும், ஆள் பெயர்களும் கூடச் சமற்கிருதமாகின.

## ஆரியம் அறிமுகம்

வடமொழியாகிய சமற்கிருதம் ஆரியம் எனத் தமிழில் அழைக்கப்பட்டது. இந்தியாவில் பிறவிடங்களைப் போன்று தமிழகத்திலும் சமற்கிருதம் அறிமுகமானது. தொல்காப்பியர் காலத்திலேயே, வடமொழி நுழைந்தாலும், இருண்டகாலத்தில் தான் ஆரியமொழி, சமய வழிபாட்டு மொழியாகவும், இலக்கிய மொழியாகவும் வலிமைபெற்றது. கி.பி. 350க்கு பின்பு தமிழரின் பண்பாட்டில் ஒட்டுமொத்த உருமாற்றம் ஆரியத்தால் நிகழ்ந்தது. பௌத்தரைவிட ஜைனர்களே சமற்கிருதத் தந்தையாயினர். இவர்கள் காலத்தில் நுழைந்த ஒட்டுமொத்த தமிழ்ப்பெயர்கள் மாற்றத்தை சமற்கிருதமயமாக்கப்படுதல் என்னும் வரலாற்று (தமிழக வரலாறும் பண்பாடும் தி.வே. செல்வம், பக்கம்.180) அடிப்படை நிகழ்ந்தது.

## சமயாசிரியர் பணி

ஆரிய மயமாக்கும் பணியில் தேவார மூவர்முதலிகள் நடுநிலைமை வகித்தனர். எனினும் தமிழுக்கு முன்னுரிமை தந்தனர். "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" என்று (அப்பர் தேவாரம் - மறைக்காடு) அப்பர் சம்பந்தப்படுத்தி நடுநிலை வகித்தார். சம்பந்தர் "தென்சொல் விஞ்சமர் வடசொல்" (சம்பந்தர் தேவாரம் - திருப்புகலூர்) என அக்காலத்தே பல்வகையிலும் பரவி கோயிலுக்குள்ளும் நுழைந்துவிட்ட சமற்கிருதத்தை "வடசொல்" என்று கூறுவது எண்ணத்தக்கது.

எழுச்சிக் காலத்தில்

சோழபாண்டியர் எழுச்சிபெற்ற காலத்தில் வடமொழி மிகவும் ஏற்றம் பெற்றது. அதே அளவு தமிழும் ஏற்றம் பெற்றது.

"வடமொழியும் தென்தமிழும்
மறைகள் நான்கும் ஆனவன் காண்"

என்று அந்தந்த மொழியின் ஏற்றம் அவ்வவ் எல்லைக்குள் அடங்கி உண்மை நாட்டுவதில் உயர்ந்து விளங்கின.

நக்கீரர் காலம்

தமிழ்ப்பண்பாட்டில் சிறந்து விளங்குவது சிவவழிபாடு. இவ்வழிபாட்டில் தலைப்பட்டவர் நக்கீரர். இவர் காலத்தில் ஆரியம் முன்னிலை வகித்து வழிபாட்டை வழிப்படுத்தியது சில "ஆரியநூல்" பல தெய்வ வழிபாட்டைக் கூறுவது. அத்தகைய நூல் தமிழில் இல்லாமையால் ஆரியத்தில் எழுதிவைத்துக்கொண்டு, வீணே மக்களை ஆசையுட்படுத்தி அலையப் பண்ணினர். அப்படி அலையச் செய்த ஒருவகை "டம்ப" நூல்களைப் "பேய்" என்று உணர்த்தினார். அந்நூலைக் கொண்டு மனிதப் பண்பு இல்லாமல் பொய்கூறி மக்களை ஏமாற்றுவார் பலர் இருந்தனர். தமிழில் இவ்வாறு ஏமாற்றும் நூல்கள் இல்லை. சமணரோ பௌத்தரோ இச்செயலில் ஈடுபட்டனர் என்று கூறவில்லை. அல்லது வெளிப்படையாக வைதிகர் என்றோ கூறவும் இல்லை. பொதுப்படையாக மக்களிடம் தமிழ்மரபற்ற கதைகளை மறைத்து அவ்வப்போது பொய்விரித்து, புலன்கள் மறைத்து தலைவரல்லாதவரைத் தலைவராக்கி வணங்கச் செய்து வருவாய் அடைந்தனர். பொய்கூறி இல்லாத வழிகளை நடத்தியவர்கள் நல்ல படிப்பாளிகள். ஆரியமும் தமிழும் கற்றவர். ஆரிய நூல் முழுவதும் அவர்க்கே விளங்கி மற்றவர்க்கு விளங்காதவை. விளங்காத நூலின் மேற்கோளை நம்பிய நாட்டு மக்களை நக்கீரர் விழிப்படையச் செய்கிறார். எதிலும் உண்மை காண வேண்டும் என்றார்.

ஓர் உவமை

ஒருவனைப் பார்த்து உன் தலை மீன் தலையாய் உள்ளது. மனிதத் தலை இல்லை என்று சொன்னால் அவன் தலையை வெட்டிப்பார்ப்பவர் இல்லை. அதுபோல இல்லாத தெய்வ வரலாறுகளைக் கேட்டு, ஆராயாமல் நம்புபவர் பலராகிவிட்டனர். உண்மை வரலாறுகளை விட்டு,

பொய்யான காமியக் கதைகளைக் கேட்டு அப்படியே நம்பி ஆய்வில்லாமல் ஆடுமாடுகளைப் போல மக்கள் "அவர்" வழி செல்வது இன்றும் நிகழ்வதே ஆகும். அப்படி ஆய்வின்றித் தவறான வழிகாட்டும் "தலைவர்களை" "மூர்க்கமார்கள்" என்றும், அம்மூர்க்க மாக்களை "எமன்" கொண்டு செல்லாதிருப்பது மிகத்தவறாகும் என்று சமயப் போலிகளை நக்கீரர் பதினொராம் திருமுறை கோபப்பிரசாதப்பகுதியில் உணர்த்தி எச்சரிக்கிறார். ஆரியமொழி தேவமொழி என்ற நம்பிக்கையில் அதன் கூற்று உண்மை என்பதை நம்பும் தமிழ் மக்களிடையே, இப்படிப்பட்ட தெய்வப்போலி வணிகரையும் அறிந்து மெய்மையில் பயணிக்க வேண்டும் என்று கூறுகின்ற நக்கீரர் எச்சரிக்கை வரிகள்:

"ஆரியப்புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று
வட்டணை பேசுவர்: மானுடம் போன்று
அம்மூர்க்க மாக்களை இன்னேகொண்டு
ஏகாக் கூற்றம்
தவறு பெரிதுடைத்தே! தவறுபெரிதுடைத்தே"

என்பதாகும். இது நக்கீரர் காட்டும் நல்லுரையாகும்.

---

## விநாயகர் நான்மணி மாலை
### (பாரதியார்)



காலைப் பிடித்தேன் கணபதி! நின்பதங் கண்ணிலொற்றி
நூலைப் பலபல வாகச் சமைத்து நொடிப்பொழுதும்
வேலைத் தவறு நிகழாது நல்ல வினைகள் செய்துன்
கோலை மனமெனு நாட்டி னிறுத்தல் குறியெனக்கே
எனக்கு வேண்டும் வரங்களை
யிசைப்பேன் கேளாய் கணபதி
மனத்திற் சலன மில்லாமல்,
மதியி லிருளே தோன்றாமல்
நினைக்கும் பொழுது நின்மவுன
நிலைவந் திடநீ செயல்வேண்டும்
கனக்குஞ் செல்வம் நூறுவய
திவையுந் தரநீ கடவாயே.

---

(27.08.2006 – விநாயகர் சதுர்த்தி)

# இலண்டனில் நமது குருமகாசந்நிதானம்

இலண்டன் சைவத் திருக்கோவில்களின் ஒன்றியம்
(5 கோவில்கள்)

1. *விம்பிள்டன் அருள்தரு விநாயகர் திருக்கோவில்.*
2. *லூசியம் அருள்தரு சிவன்கோவில்.*
3. *ஈலிங் அருள்தரு கனகதுர்க்கை அம்மன் கோவில்.*
4. *உயர்வாசல் குன்று அருள்தரு முருகன் கோவில்.*
5. *ஸ்ரோன்லி அருள்தரு இராஜஇராஜேஸ்வரி அம்மன் கோவில்.*

இந்த ஐந்து கோவில்களின் ஒன்றியம் ஆண்டுதோறும் சைவ சமயக் கருத்தரங்க மாநாடு நடத்துகிறது. அதில் கலந்துகொள்ள தமிழகத்திலிருந்து சைவத் திருமடங்களின் தலைவர்கள், சைவ சமய அறிஞர்கள் அழைக்கப்படுகிறார்கள். 15.16.07.2006 சனி, ஞாயிறு ஆகிய நாள்களில் 9-வது சைவ மாநாடு லண்டனில் நடைபெற்றது. அதில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் குருமகா சந்நிதானம் தவத்திரு பொன்னம்பல அடிகளார், பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார், திருச்சிராப்பள்ளி பேராசிரியர் சோ. சத்தியசீலன், தருமபுரம் கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் மு.சிவச்சந்திரன், தூத்துக்குடி பேராசிரியை திருமதி. மதிமணி ஆகியோர் கலந்துகொண்டனர்.

சைவ மாநாட்டில் "சைவமும் திருமுறைகளும் - திருமந்திரமும்" என்ற பொருளைப் பொதுக் கருத்தாகக் கொண்டு நிகழ்ச்சி முறைகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

13.7.2006 வியாழக்கிழமை

தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் மாலை 2.30 மணிக்கு "தீபம்" தொலைக்காட்சி நிலையத்தில் ஒருமணி நேரம் பேட்டி அளித்தார்கள். பேட்டி கண்டவர் உதயகுமார் கண்ணன். புதிய கண்டம், புதிய நாடு, புதிய நிலையம், புதிய முகம், புதிய நிகழ்ச்சி. இந்த நிகழ்ச்சி சைவக் கருத்தரங்கிற்கு அறிமுக நிகழ்ச்சி. 14.7.06இல் ஒலிபரப்பப்பட்டது. ஒலிபரப்பைப் பார்த்தவர்கள், கேட்டவர்கள் குருமகாசந்நிதானத்தின் பதில்கள் அருமையாக இருந்ததாக நேரில் தெரிவித்தார்கள்.

## 14.7.2006 வெள்ளிக்கிழமை

மாலை 6 மணி விம்பிள்டன் அருள்தரு விநாயகர் கோவிலில் வரவேற்பு செய்தார்கள். திருக்கோவில் வழிபாட்டிற்குப் பின் சிறப்பு நிகழ்ச்சி. மாநாட்டு நிகழ்ச்சியின் முதல் கோவில் பேச்சாக இது அமைந்தது. குருமகாசந்நிதானம் அவர்கள் பேசும்போது லண்டன் மாநகரத்தில் முதல் முறையாக மாநாட்டில் கலந்து கொள்வதின் முதல் நிகழ்ச்சி விநாயகர் வழிபாடும் அவரைப் பற்றிய சிந்தனையுரையுமாக அமைந்துள்ளது சாலப் பொருந்தும் என்றார்கள். இது அனைவரையும் கவர்ந்த பேச்சாக இருந்தது.

## 15.7.2006 சனிக்கிழமை

காலை 9 மணி ஈலிங் அருள்தரு கனகதுர்க்கை அம்மன் கோவிலில் குருமகா சந்நிதானம் அவர்களும், பேரூர் சாந்தலிங்க இராமசாமி அடிகளார் ஆகியோரும் திருவானப்புத்தூர் ஏ.கே. கலியமூர்த்தி குழுவினரின் நாதஸ்வரம் மேளம் முழங்க வரவேற்கப்பட்டு, அம்மன் கோவில் சிறப்பு வழிபாடு செய்தபின்பு முதல் நாள் மாநாட்டு நிகழ்ச்சி தொடங்கியது.

மாநாட்டின் நிகழ்ச்சி, சென்னை சாமிதண்டபாணி ஓதுவார் திருமுறை பாட பேரூர் அடிகளார் நந்திக்கொடி ஏற்ற குருமகா சந்நிதானம் குத்துவிளக்கேற்ற தொடங்கியது.

காலை 9.30 மணிக்குத் தொடங்கி இரவு 8.30 மணி வரை நடைபெற்றது.

பாரீஸ் தவத்திரு யோகானந்த அடிகள்,
நாவரசர் சோ. சத்தியசீலன்
முனைவர். மு. சிவச்சந்திரன்
திருமதி. மதிமணி மற்றும் அறிஞர்கள், இளைஞர்கள் இந்நிகழ்ச்சியில் மேலும் கலந்துகொண்டு சிறப்புச் செய்தார்கள்.

## 16.7.2006 ஞாயிற்றுக்கிழமை

இரண்டாம் நாள் கருத்தரங்க மாநாடு - நிறைவு விழா

காலை 9 மணியளவில் லூசியம் சிவன் கோவிலில் காலை சிறப்பு வழிபாடு நடைபெற்றது. பேரூர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகள் முன்பில் குன்றக்குடி குருமகா சந்நிதானம் அவர்கள் நந்திக் கொடியேற்றி வைத்து விழாவினைத் தொடங்கி வைத்தார்கள். விழா அரங்கம் மிகப் பிரமாண்டமானது.

இரவு 8.30 மணிவரை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

நூல் வெளியீட்டுவிழா, சிறப்புரைகள், கருத்தரங்கம், பரிசுகள் வழங்குதல், இளைஞர்கள் கருத்தரங்கம், வினாவிடையரங்கம் தக்கவர்களுக்குச் சிறப்புச் செய்தல் ஆகியன நிகழ்ந்தன.

கருத்தரங்கில் பேரூர் அடிகளார் சோ. சத்தியசீலன், மு.சிவச்சந்திரன், திருமதி. மதிமணி ஆகியோரும் சான்றோர்களும் கலந்து கொண்டார்கள்.

மாநாட்டின் சிறப்புரையாகவும் நிறைவுப் பேருரையாகவும் குன்றக்குடி குருமகா சந்நிதானத்தின் பேச்சு சிறப்பாக அமைந்திருந்தது. அனைவராலும் பாராட்டப்பெற்றது.

மதியம் கருத்தரங்கில் பங்கேற்றவர்களில் ஒரு அன்பர் "அனைவரும், அர்ச்சகராகலாம்" என்று தமிழக அரசு கொண்டுவந்துள்ள ஆணை பற்றிக் கருத்துச் சொன்னார்.

அடிப்படையான செய்தியும் வரலாறும் தெரியாத நிலையில் கருத்துச் சொன்னதற்கு குன்றக்குடி குருமகா சந்நிதானம் அவர்கள் "அடிப்படையான செய்திகளைக் கூறியதோடு கடந்தகால வரலாறு, சமூகம் செய்யத் தவறிய, நல்ல பல காரியங்களை அரசாணை மூலம் அரசு செய்துள்ளது என்று ஆதாரபூர்வமாக எடுத்துரைத்து உணர்த்தினார்கள். இது மாநாட்டில் அனைவரையும் கவர்ந்த ஒரு கருத்தாகும்.

இரண்டு நாள் சைவ மாநாட்டுக் கருத்தரங்கம் திருவருள் துணை கொண்டு இனிதே நிறைவுற்றது.

லண்டனில் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் குருமகா சந்நிதானம் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் கலந்து கொண்ட நிகழ்ச்சிகள்.

14.7.2006 விம்பிள்டன் அருள்தரு விநாயகர் திருக்கோவில் வழிபாடு மற்றும் சிறப்புச் சொற்பொழிவு.

15.7.2006 ஈலிங் அருள்தரு கனகதுர்க்கை அம்மன் கோவில் சிறப்பு வழிபாடு மற்றும் கருத்தரங்கம்.

16.7.2006 லூசியம் அருள்தரு சிவன்கோவில் வழிபாடு மற்றும் கருத்தரங்கம்.

| | |
|---|---|
| 18.7.2006 | இலண்டன் இல்போர்டு அருள்தரு செல்வவிநாயகர் கோவில் வழிபாடு சிறப்புச் சொற்பொழிவு மற்றும் சைவ முன்னேற்றச் சங்கம் பார்வை. |
| 19.7.2006 | உயர்வாசல் குன்று அருள்தரு முருகன் கோவில் வழிபாடு மற்றும் சிறப்புச் சொற்பொழிவு. |
| 21.7.2006 | லூசியம் சிவன்கோவில் வழிபாடு சிறப்பு சொற்பொழிவு, பாராட்டு விழா.<br>நீஸ்டன் ஸ்ரீ நாராயணன் திருக்கோவில் வழிபாடு.<br>மாலை - இலண்டன் மனோர் பார்க் அருள்தரு முருகன் கோவில் சிறப்பு வழிபாடு மற்றும் சிறப்புச் சொற்பொழிவு. |

பிற நிகழ்ச்சிகள்

| | |
|---|---|
| 13.7.2006 | தீபம் தொலைக்காட்சியில் 1 மணி நேரம் பேட்டி. |
| 18.7.2006 | I.B.C அனைத்துலக ஒலிபரப்பு நிலையம் மூலம் நேரடி ஒலிபரப்பு கலந்துரையாடல் 1 மணி. |

1. தவத்திரு குருமகா சந்நிதானம்
2. தவத்திரு பேரூர் அடிகளார்
3. நாவரசர் சோ. சத்தியசீலன்
4. டாக்டர். மு. சிவச்சந்திரன்
5. திருமதி. மதிமணி

"சுடரொளி - பத்திரிகை" பேட்டி.

எல்லா நாள்களிலும் மற்ற நேரங்களில் தமிழ் அன்பர்கள், அறிஞர்கள், அருள்நெறித் திருக்கூட்ட அன்பர்கள் சந்திப்பும், ஆசி வழங்குதலும் நிகழ்ந்தன.

இலண்டன் மாநகரில் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பல இடங்கள் பார்க்கப்பட்டன. 23.7.2006 பிற்பகல் 12.50 மணிக்கு லண்டனிலிருந்து விமானம் மூலம் புறப்பட்டு 24.7.2006 அதிகாலை 3.45 மணிக்கு சென்னை வந்து சேர்ந்தார்கள்.

தொகுப்பு : சு. செல்வராஜ்

1. இலண்டனில் சில சைவக் கோவில்கள் கட்டுவதற்கு இடமில்லாமல், விலைக்கு வந்த சில சர்ச்சுகளை வாங்கி அதை சைவக் கோவில்களாக மாற்றியுள்ளார்கள்.
2. இலண்டன் சைவக் கோவில்களில் தமிழ் அருச்சனை நடைபெறுகிறது.

# குன்றைப்பதி

(மூத்த தமிழறிஞர். பெரும்புலவர். **ப. அரங்கசாமி**)

தரவுகொச்சகக் கலிப்பா

நிலங்காட்டும் வளமோங்கும் நிழல்காட்டும் பொழிலோங்கும்
தலங்காட்டும் அருளோங்கும் தமிழ்காட்டும் புலமோங்கும்
நலங்காட்டும் சைவநெறி நனிகாட்டும் பழம்பதியாம்
வலங்காட்டும் ஆதீனம் வரைகாட்டும் குன்றையதே.

உருகாட்டும் உடையோங்கும் ஊர்காட்டும் புகழோங்கும்
அருள்காட்டும் நெறியோங்கும் அறங்காட்டும் பணியோங்கும்
அருள்தந்தை வகுத்தளித்த ஆதீன மரபோங்கும்
குருபொன்னம் பலஅடிகள் குரலோங்கும் குன்றையதே.

அருள்தந்தை பெருமானின் அருளுருவம் அமைந்துள்ள
அருள்கோயில் எழில்காட்டும் அவர்மொழிகள் அவண்காட்டும்
குருகாட்டும் நெறிவிளங்கும் குன்றக்குடி ஆதீனக்
குருமுனிவர் பொன்னம்பல அடிகள்பதம் கூறுதுமே.

குறிப்பு : 1. வலம் - வெற்றி, வலிமை. வரை - மலை. குன்றையதே - குன்றக்குடி அதுவே. 2. உடை - துவராடை (காவியுடை)

# எங்கே போகவேண்டும்?

எங்கே போகின்றோம் என்ற கேள்விக்குப் பதிலாக நாம் எங்கே போக வேண்டும் என்ற கேள்வியைக் கேட்கப் போகின்றோம், ஆம்! மனிதனை முதலில் உருவாக்க வேண்டும். படிப்பாளிகளை உருவாக்கி இருக்கிறோம். ஆனால் படைப்பாளிகளை உருவாக்குகின்ற கல்வி, படைப்பாளிகளை உருவாக்குகின்ற அறிவு திசைநோக்கி நாம் இனி போகவேண்டும். உழைப்பு என்பது உயர்ந்தது. மதிப்பில் உயர்ந்தது. தவமனையது. அந்த உழைப்பை அலட்சியம் செய்யக்கூடாது. ஒரு நாட்டு மக்கள் கடுமையாக உழைத்தால் அந்த நாடு வளரும்! வளரும்!

**-தவத்திரு குன்றக்குடி அடிகளார்**

"எங்கே போகிறோம்" - என்ற நூலில் இருந்து

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# அறிவியல் உறவும் ஆன்மீக உறவும்

(டாக்டர். **கே. பாலகிருஷ்ணன்**)

பாகம் - 4

கிராம வளமும், பொருளாதார முன்னேற்றமும் ஒருங்கிணைந்த வளர்ச்சித் திட்ட அடிப்படையில்தான் ஏற்படக்கூடும் என்று கூறப்பட்டது. எடுத்துக்காட்டாக தரிசு நில மேம்பாட்டின் மூலம் முந்திரி பயிர் சாகுபடியினால் கிடைக்கும் விளைச்சலைப் பயன்படுத்தி மதிப்பூட்டப்பட்ட பொருட்கள் தயாரிப்பதன் மூலம் கிராமங்களில் கிடைக்கும் மூலப்பொருட்களை கிராமத்தில் பயன்படுத்தி வேலைவாய்ப்பை ஏற்படுத்திய செய்தியையும் அறிந்தோம். பிறகு தோட்டக்கலை தொழில் நுட்பங்களைப் பயன்படுத்தி பழமரங்கள் வளர்த்து காய்கறிகள், பழங்கள் பதப்படுத்தும் தொழில்நுட்பங்களையும், விலை மதிப்புள்ள உணவுப் பொருட்களை தயாரிக்கும் தொழில்களைப் பற்றியும் பார்த்தோம்.

வேளாண் தோட்டக்கலைக்குப் பிறகு கால்நடை வளத்தைப் பற்றி அடிகளார் அவர்களின் சிந்தனைகளைக் கருத்தில் கொள்வோம்.

வேளாண் சார்ந்த தொழில்களை கிராமங்களில் வலுப்படுத்துவதன் மூலம்தான் நிரந்தரமான கிராம வளர்ச்சியை நிலைநாட்ட முடியும் என்ற அடிகளாரின் கொள்கையை முன்பே குறிப்பிட்டோம். வேளாண்மை, தோட்டக்கலை வேரூன்ற வேண்டுமானால் கால்நடை வளம் பெருக வேண்டும் என்று கூறுவார். இதன் அடிப்படை நோக்கம் அன்று பலருக்கும், என் போன்ற விஞ்ஞானிகளுக்கும் விளங்கியதாகத் தெரியவில்லை. 1980 - ஆம் ஆண்டுகளில் எவரும் இயற்கை வேளாண்மையைப் பற்றி (Organi Farming) (அயல்நாட்டிலும் கூட) சிந்தித்ததாகக் குறிப்பு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. செயற்கை வேதியல் உரங்களைப் பயன்படுத்துவதில் அன்றே அடிகளார் அவர்களுக்கு உடன்பாடு இல்லை. திட்டக்குழு கூட்டங்களில் இயற்கை உரமும் அதிகமாக தொழு உரமும் இடவேண்டும் என்று வற்புறுத்துவார்கள்.

இன்று உலகம் முழுவதும் தொழிலக வேளாண்மையிலிருந்து (Industrial Agriculture) இயற்கை வேளாண்மைக்கு (Sustainable Agriculture) மீண்டும் முயற்சிப்பதை நாம் அறிவோம்.

ஆக, கால்நடை வளத்தைப் பெருக்குவது திட்டக்குழுவின் பணிகளில் ஒன்றாக இருந்தது. முக்கியமாக பால் மாடுகள், உழவு மாடுகள், ஆடுகள் இவற்றிற்கு திட்டக்குழு கடன் வசதிகள் பெருமளவு செய்தது. மாதந்தோறும் குறிப்பிட்ட எண்ணிக்கை வேளாண் மக்களுக்கு கொடுக்க வேண்டும் என்ற குறியீடு இருந்தது. இதற்கு (IRDP) ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டத்தின் கீழ் மானியத்துடன் கடன் வசதிகள் ஏற்பாடு செய்யப்பட்டது. கூட்டுறவுத் துறையில் ஆடு வளர்ப்புச் சங்கம், பால் உற்பத்தி சங்கம் போன்ற கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டன. ஒரு காலத்தில் குன்றக்குடி, நேமம், கொரட்டி போன்ற பல கிராமங்களில் ஆயிரக்கணக்கான ஆடுகளும், நூற்றுக்கணக்கான பால் மாடுகளும் இருந்தன.

அடிகளார் அவர்கள் இறைச்சி உற்பத்தியை நவீனப்படுத்தவும், தோலை விலை உயர்ந்த பொருளாக மாற்றவும், பிறகு தோலிலிருந்து விலை மதிப்பு ஊட்டப்பட்ட பொருள்களாக்கவும் மாற்ற விரும்பினார்.

இந்த துறைகளில் ஆராய்ச்சி செய்து வரும் மைய தோல் ஆராய்ச்சி நிறுவனத்தை அணுக தீர்மானிக்கப்பட்டது. அதிர்ஷ்டவசமாக முனைவர் G. தியாகராஜன் இயக்குநராகப் பொறுப்பேற்று பணி புரிந்து கொண்டிருந்தார். அவர் ஏற்கனவே ஹைதராபாத்தில் பிராந்திய ஆய்வுக்கூடத்தில் இயக்குநராக இருந்தபோது அடிகளார் அவர்களுக்கு அறிமுகமானது நினைவு கூறலாம்.

அடிகளார் அவர்களும் நானும் சென்னையில் உள்ள மைய தோல் ஆராய்ச்சி நிறுவனத்திற்கு முன்னனுமதி வாங்கி பார்வையிடச் சென்றோம். இயக்குநர் தியாகராஜன் அவர்களும், மற்ற விஞ்ஞானிகளும் அடிகளார் அவர்களை மிக்க அன்புடனும், ஏற்ற மரியாதையுடனும் வரவேற்றனர். இயக்குநர் அவர்கள் தன்னுடைய அறையில் ஆய்வகத்தின் முக்கியப் பணிகளை அடிகளார் அவர்களுக்கு விளக்கினார்கள். உயர்ந்த ரகமான தோல் பெற வேண்டுமானால், கால்நடைகள் பராமரித்து, பிறகு அவை இறந்தவுடன் சேதமில்லாமல்

தோலை உரிப்பது, பிறகு பதப்படுத்துவது போன்ற துறைகளில் உள்ள ஆராய்ச்சிகளையும், கால்நடைகள் இறந்த பிறகு மற்ற பல்வேறு பாகங்களிலிருந்து கிடைக்கக்கூடிய பொருள்களைப் பற்றியும், தோல் பொருட்கள் தயாரித்தல், தோல் ஆடைகள் தயாரித்தல் மற்றும் அதற்கான பயிற்சிகள் கொடுத்தல், தோல் பதனிடுதல் புதிய முறைகள் மற்றும் இந்த துறைகளில் மாசுக் கட்டுப்பாடு முறைகள் ஆகியவற்றை விளக்கினார்.

பிறகு இது சம்பந்தப்பட்ட ஆய்வுக்கூடங்களுக்கும்;, முன்னோடி தொழில் கூடங்களுக்கும் (Pilot plant) தோல் பொருட்கள் பயிற்சி மையத்திற்கும் எங்களை அழைத்துச் சென்று காண்பித்தார்கள்.

பல தொழில்களுக்கான திட்ட வரைவுக் குறிப்பும் (Project Profile) எங்களிடம் கொடுக்கப்பட்டன.

அடிகளார் அவர்களுக்கு அளவு கடந்த உற்சாகம். மதிய உணவு இடைவேளையின்போது நாம் தோல் பதனிடும் தொழிற்சாலை அமைக்க வேண்டும். இறைச்சி உற்பத்தியை நவீனப்படுத்த வேண்டும். தோல் பொருட்கள் தயாரிப்பதற்கான பயிற்சி பெற்று, உற்பத்தியை குன்றக்குடியில் துவக்க வேண்டும் என்று கூறி, என்னிடம் அதற்கான தேவைகளைக் குறித்துக் கொள்ளுங்கள் என்றார். இயக்குநர் அவர்கள் தனது இல்லத்தில் எங்களுக்கு மதிய உணவிற்கு ஏற்பாடு செய்து இருந்தார்கள்.

தோல் பதனிடும் முன்னோடி தொழிற் கூடத்தைப் பார்வையிட்டபோது அதில் அடுத்தடுத்து செய்ய வேண்டிய முறைகளைப் பார்த்தோம். உரோமம் நீக்குதல், க்ரோமிக் அமிலத்தில் ஊறவைத்து பதனிடுதல், பதனிட்ட பிறகு அது கெடாமல் இருக்க பூச்சிக் கொல்லிகள் பயன்படுத்துதல் என்று சில முக்கிய செயல்களை கவனித்தோம். அப்பொழுது அடிகளார் அவர்களிடம் க்ரோமிக் அமிலம் நச்சுத் தன்மையுடையது. பூச்சிக் கொல்லிகளாலும் நிலம், நீர் மாசுபட வாய்ப்பிருக்கின்றது. இதைத் தவிர்க்க வேண்டுமானால் கடினமான மாசுக் கட்டுப்பாடு முறைகளை நாம் செயல்படுத்த வேண்டியிருக்கும் என்று கூறினேன். இதனால் தோல் பதனிடும் தொழிலில் அடிகளார் அவர்களுக்கு ஆர்வம் குறைந்தது.

பிறகு எங்கள் கவனம் தோல் பொருட்கள் உற்பத்தியில் சென்றது. மாலையில் கலந்துரையாடல் நடக்கும்பொழுது, சிறிய கிராமத்தில் மாசுக் கட்டுப்பாட்டு முறைகள் செயல்படுத்துவது எளிதல்ல. தோல் பதனிடும் தொழிலை இரண்டாம் நிலையில் வைத்துக்கொள்ளலாம். முதல் கட்டத்தில் எங்களுக்கு தோல் பொருட்கள் உற்பத்திக்கான பயிற்சி கொடுத்து உற்பத்திக்கு வழிகாட்ட வேண்டும் என்று கூறினார்கள்.

இயக்குநர் முனைவர் தியாகராஜன் இரண்டு நபர்களுக்கு 6 மாத காலத்திற்கு இலவசமாகப் பயிற்சி அளிக்க முன்வந்தார். (இந்த ஆய்வகம் பொதுவாக பயிற்சிக் கட்டணம் கணிசமாக வாங்கி வருகிறது என்பது குறிப்பிடத்தக்கது) உற்பத்தியிலும் ஒரு திட்டத்தின் கீழ் உதவி புரிவதாகக் கூறினார்.

ஊர் திரும்பியவுடன் அடிகளார் அவர்கள் குன்றக்குடியிலிருந்து இரண்டு பெண்களை மைய தோல் ஆராய்ச்சி கழகத்திற்கு பயிற்சிக்காக அனுப்பி வைத்தார்கள்.

இதற்கிடையில் அடிகளார் அவர்களை ஆய்வகத்தின் விழா ஒன்றுக்கு இயக்குநர் பேச அழைத்திருந்தார்.

அடிகளாரை அறிமுகம் செய்யும்பொழுது முனைவர் தியாகராஜன் அடிகளார் அவர்களின் கிராம முன்னேற்றப் பணிகளைக் குறிப்பிட்டு, அவரது ஆய்வகமும் அதில் பங்கு கொள்வதில் அவருக்கு மிக்க மகிழ்ச்சி அளிப்பதாகவும் குறிப்பிட்டார்.

விழாவிற்கு சஹஸ்ரநாமம் என்பவர் வந்திருந்தார். அவர் ஐக்கிய நாடுகளின் மகளிர் வளர்ச்சிக்கான திட்டத்தின் இயக்குநர் தோல் ஆராய்ச்சி நிறுவனத்துடன் இணைந்து இத்துறையில் பல திட்டங்கள் செயல்படுத்தி வந்தார். முனைவர் தியாகராஜன், திரு சஹஸ்ரநாமமும் கலந்து பேசி குன்றக்குடி திட்டக்குழுவிற்கு இத்திட்டத்தின் கீழ் உதவி புரிய முன்வந்தார்கள். பருத்தி புடவையாய் காய்த்த மகிழ்ச்சி அடிகளார் அவர்களுக்கு.

குன்றக்குடியில் பழுதடைந்திருந்த கட்டிடத்தை ஒரு லட்ச ரூபாயில் சீரமைத்தார். மகளிருக்கான கை பைகள், பள்ளி மாணவர்களுக்கான பைகள், மக்களுக்குத் தேவையான பைகள், காலணிகள் என்று பலவிதமான தோல் பொருட்கள் தயாரிக்க வேண்டிய தளவாடங்கள் சென்னையிலிருந்து வந்திறங்கின. ஆய்வகத்திலிருந்து

விஞ்ஞானிகள் குன்றக்குடியில் தங்கி நூற்றுக்கும் மேற்பட்ட கிராம மக்களுக்குப் பயிற்சி அளித்தார்கள். பயிற்சி மையம் உற்பத்தி மையமானது. தோல் பொருட்கள் அதிக விலையானதால், கிராமங்களில் பயன்படுத்துவதற்காக ரெக்சின் போன்ற துணிவகைப் பொருட்கள் தயாரிக்க பயிற்சி அளிக்கப்பட்டது.

பயிற்சி மையம் உற்பத்தி மையமாகவும் செயல்பட்டது. இன்றும் இந்த மையம் செயல்பட்டு வருகிறது.

நவீன இயந்திரங்கள் தையல் இயந்திரங்கள் அடங்கிய இந்த பயிற்சிக் கூடத்தில் நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் பயிற்சி பெற்றனர்.

சிலர் குழுவாக அமைத்துக்கொண்டு உற்பத்தி செய்து வந்தனர்.

இப்பயிற்சி மையத்திற்கு ஆராய்ச்சி நிறுவனத்திலிருந்து விஞ்ஞானிகள் அடிக்கடி வந்து புதிய பொருட்கள் தயாரிப்பது மற்றும் காலணிகள் தைப்பது போன்ற தொழில் பயிற்சி அளித்து வந்தார்கள். சவ்வுத் தோலிலிருந்து பொம்மலாட்டத்திற்கு வேண்டிய பொம்மைகள் தயாரிக்கும் சிறப்புப் பயிற்சி குன்றக்குடியிலேயே கொடுக்கப்பட்டது.

இம்மையம் இன்றும் குன்றக்குடியில் செயல்படுகிறது. பள்ளி மாணவர்களுக்கு வேண்டிய பைகள், மகளிர் பைகள் மற்றும் பல்நோக்கு பைகள் தயாரித்து விற்று வருவது குறிப்பிடத்தக்கது.

அடிகளார் அவர்கள் இயக்குநர் தியாகராஜன் அவரிடமும் ஆராய்ச்சி நிறுவனத்தின் விஞ்ஞானிகளுடன் அளவு கடந்த அன்பு பூண்டிருந்தது குறிப்பிடத்தக்கது. இயக்குநர் தியாகராஜன் அவர்கள் ஒருமுறை விபத்துக்குள்ளாகி மருத்துவமனையில் சேர்க்கப்பட்டபோது அவர் நிலைமை மிகவும் கவலைக்கிடமாக இருந்தார். இதை அறிந்த அடிகளார் கூட்டத்தில் பேச்சை விரைவாக முடித்துக்கொண்டு என்னையையும் காரில் அழைத்துக்கொண்டு சென்னைக்கு விரைந்து சென்று உடல் நலம் விசாரித்தார். சென்னையில் உள்ள தன் உதவியாளர்களை அவரைக் கவினத்துக்கொள்ளும்படி உத்தரவிட்டார். பொதுவாக அடிகளார் அவர்கள் விஞ்ஞானிகளிடத்தில் பழகும்போது நட்புறவும், சகோதர மனப்பான்மையும் அவர்களிடம் ஓங்கி நின்றது மறக்க இயலாது.

- தொடரும்

# பாராட்டு

(கவிவேந்தர். **கா. வேழவேந்தன்**)

பாராட்டத் தகுந்தவரைப் பாராட் டாமல்
பராமுகமாய் இருப்பதுவும் குற்றம் என்பேன்!
நீராட்டால் உடல்மட்டும் குளிரும்; ஆனால்
நேயமிகு பாராட்டால் நெகிழும் நெஞ்சம்!
சீராட்டும் தென்பாங்குத் தாலாட் டாலே
சேய்மழலை இன்பத்தில் நீந்தும்; நல்லோர்
பாராட்டைப் பெறுவதனால் இன்னும் இன்னும்
பலநூறு சாதனைகள் புரிவார், திண்ணம்!

புறமுதுகில் குத்துவதோ கயமை; ஆனால்
பொன்னான தொண்டாற்றும் தூயோர் தம்மைப்
புறமுதுகில் தட்டியிங்கே போற்றல் மேன்மை!
புகழ்ப்பணியால் நலங்குவித்த மேலோர் தோளில்
மறவாமல் பொன்னாடை போர்த்து தல்ஏன்?
மகத்தான அரும்பணிகள் தொடர்வ தற்கே
சிறகுகட்டி விடுகின்றோம்; சொன்னால் நந்தம்
செயல்கூட சுயநலந்தான்! பொய்யா சொன்னேன்?

உள்ளங்கை எழுப்புகின்ற ஓசை உங்கள்
உள்ளங்கள் எதிரொலிக்கும் ஓசை தானே!
வெள்ளத்தின் பெருக்காலே துள்ளும் மீன்கள்;
வெண்ணிலவின் ஒளிநகையால் விரியும் அல்லி!
அள்ளி அள்ளி நாம்வழங்கும் பாராட் டொன்றே
ஆன்றோர்க்கு நாம் செலுத்தும் நன்றி! அன்னார்
பள்ளத்துள் விழிமூடி உறங்கும் முன்னர்
பாராட்டி மகிழ்ந்திடுவோம்; மகிழச் செய்வோம்!

---

# அடியார்க்கும் அடியேன்

(கழுகுமலை. வை.பூ. சோமசுந்தரம்)

## முன்னுரை

"சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்த சொல்லுவார்" என்பது திருவாசகம். பாட்டிலுள்ள வரிகள் மற்றும் சொற்கள் உணர்த்தும் பொருளினை உணர்ந்து தெளிதல் சிறப்புடையது. "காவியம் ஆயிரம் கற்பினும் ஆழ்ந்திருக்கும் கவியுளம் காணார்" என்று பாரதி வெகுள்வார். பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடினார் சேக்கிழார் சுவாமிகள். பெரியபுராணத்தின் மலர்ச்சிக்கு வழி அமைத்தது திருத்தொண்டத்தொகை.

சுந்தரர் அடிமை என்ற தலைப்பில் 11 பாடல்களில் திருத்தொண்டர்களுக்குத் தாம் அடிமை என்று பாடும் தொகை இது! இத்தொகையில் - ஓர் ஆய்வு - இக்கட்டுரை.

## அம்மானுக்கு ஆளே

"ஆருரன் ஆருரில்" - அம்மானுக்களே என்று 11 பாடல்களின் இறுதியிலும் ஆருரன் ஆருரில் அம்மானுக்கு ஆளே? என்று கூறுபவர் - திருத்தக்க தொண்டர்களுக்கு "அடியேன்" என்றும் "அடியார்க்கும் அடியேன்" என்றும் பாடுவார். இந்த வேறுபாடான சொல் ஆட்சியின் நுட்பம் என்ன? இதனை எண்ணிப் பார்ப்பதே இக்கட்டுரை.

## ஆட்கொள்ளல்

"தடுத்து ஆட்கொண்ட புராணம்" என்ற பகுதியில் சுந்தரரை சிவனார் தம் அடியார் என்று வாதிட்டு, நடைபெற இருந்த திருமணத்தை விலக்கி, பரவையார் மற்றும் சங்கிலியாரை மணம் செய்திடச் செய்தமை - தடுத்ததும், ஆட்கொள்ளலும் என்று உணர்கிறோம். "ஆள்" எனில் ஒருவனைக் குறிக்கும்."ஆள்" பின்னர் ஆடவன் ஆகியிருக்கலாம். ஆளுமைத்தன்மை, ஆண்மை உடையவன் ஆள் என்று உருவாகி, பெண் என்பது பெண்மைத்தன்மை உடையவருக்காக, வந்திருக்கும் பின்னர் உலகவழக்கில் "ஆம்பளை ஆள் - பொம்பளை ஆள்" என்று ஆள் பொதுச் சொல்லாகவும் வருவது காண்கிறோம்.

"என்னையும் ஆண்டுகொண்டு"
இன்னருள் புரியும்
எம்பெருமாள் பள்ளி எழுந்தருளாயே!
என்பார் மாணிக்கவாசகர்.

"துணிந்தே உமக்கு ஆள்செய்து
வாழல் உற்றால் சுடுகின்றது சூலை
தவிர்த்தருளீர்" என்று
துடிக்கிறார் நாவுக்கரசர்.

"இதுவோ எமை ஆளுமாறு ஈவது ஒன்று
எமக்கில்லையேல் -
அதுவோ உன்னது இன்னருள்!"
என்று ஞானக்குழந்தை கேட்கிறது.

எனவே சிவனார் "ஆளுவது" "ஆள் செய்வது" ஆண்டு கொள்வது, தடுத்தாட்கொள்வது என்பன "ஆளுதல்" "ஆட்டுதல்" "ஆட்டுவித்தல்" "அடிமை கொள்ளல்" "தம்முடன் இணைத்தல்" என்ற பொருள்களில் வரும் "ஆளுதல்" பிறவினை என்று கொள்ளலாம். இறைவன் நம்மை ஆட்சி செய்தல் - அன்பனாய் ஏற்றல் முதலிய கருத்துப்பட நிற்பது அது!

"அம்மாள் ஆள்"
"அம்மானுக்கு ஆள்"
என்ற இரு சொற்றொடர்களிலும் கூட சிறு வேறுபாடு உண்டு.

அடியேன் : "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்பதே அடியேனுக்குரிய இலக்கணம். திருத்தொண்டத் தொகையில் 46 அடியார்களைப் பற்றிக் கூறும்போது

திருநீல கண்டத்துக் குயவனார்க்கு அடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்கு அடியேன்
விரிபொழில்சூழ் குன்றைபார் விறல்மிண்டர்க்கு அடியேன்

என்று பாடுவார். 23 தனி அடியார், 4 தொகை அடியார்களைக் குறிப்பிடும் போது "அடியார்க்கும் அடியேன்" எனப்பாடுவார்.

(தொடரும்)



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

குன்றக்குடி - 630 206

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின்அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

| | | |
|---|---|---|
| தகுதி | : | தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும். |
| பயிற்சி நேரம் | : | பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம். |
| குறிப்பு | : | ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும். |

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!






**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

MAKKAL CHINTHANAI - August 2006 Price Rs. 3-50
Date of Publication 20-08-2006
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008






பெறுநர்

திரு

ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166